الصلاة في السفر - تاميلي

# பயணத்தில்
## தொழுவதன் சட்டங்கள்

جمعية الدعوة والإرشاد وتوعية الجاليات بالزلفي

180

هاتف: ٠١٦ ٤٢٣٤٤٦٦ ـ فاكس: ٠١٦ ٤٢٣٤٤٧٧

جمعية الدعوة بالزلفي

**الصلاة في السفر**

**أعده وترجمه إلـــى اللغة التاميلية:**

**جمعية الدعوة والإرشاد وتوعية الجاليات بالزلفي**

**الطبعة الثانية: ١٤٤٢/٨ هـــ.**

ح شعبة توعية الجاليات بالزلفي، ١٤٣٣هـ

*فهرسة مكتبة الملك فهد الوطنية أثناء النشر*

**شعبة توعية الجاليات بالزلفي**

الصلاة في السفر – الزلفي ، ١٤٣٣ هـ

٤٥ ص؛ ١٢ × ١٧ سم

ردمك : ٧-٢٦- ١٣-٨٠١٣-٦٠٣-٩٧٨

(النص باللغة التاميلية )

١-صلاة المسافر	أ. العنوان

ديوي ٢٥٢.٢٨	١٤٣٣ /٣٢

رقم الإيداع : ٣٢/ ١٤٣٣

ردمك : ٧-٢٦- ١٣-٨٠١٣-٦٠٣-٩٧٨

# الصلاة في السفر

# பயணத்தில் தொழுவதன் சட்டங்கள்

## சில சுன்னத்துகளும் ஒழுக்கங்களும்

### குடும்பத்தாரிடம் விடைபெற்றுக் கொள்ளல்

பயணம் செல்பவர் தன் குடும்பத்தார்களிடமும் நண்பர்களிடமும் பயணம் சொல்லி விடை பெற்றுக் கொள்வது சுன்னத்தாகும். அப்போது அவர் பின்வருமாறு கூற வேண்டும். “அஸ்தவ்திவு குமுல்லாஹல்லதீ லா தளீவு வதாயிவுஹு.” (இப்னுமாஜா 2825) அல்பானி இதனை சரிகண்டுள்ளார்கள்.

أَسْتَوْدِعُكُمُ اللهَ الَّذِي لَا تَضِيعُ وَدَائِعُهُ

(**பொருள்:** நான் உங்களை அல்லாஹ்விடம் ஒப்படைக்கிறேன். அவனிடம் ஒப்படைக்கப்பட்ட பொருட்கள் வீணாகிப்போவதில்லை.)

அதற்கு அவர்கள் பயணம் செல்பவருக்காக பின்வருமாறு மறுமொழி கூற வேண்டும். “அஸ்தவ்திவுல்லாஹ தீனக வஅமானதக, வகவாதிம அமலிக.” (திர்மிதி 3443) அல்பானி இதனை சரிகண்டுள்ளார்கள்.

أَسْتَوْدِعُ اللهَ دِينَكَ وَأَمَانَتَكَ وَخَوَاتِيمَ عَمَلِكَ

(**பொருள்:** உமது தீனையும் உமது அமானத்- பொறுப்புக்களையும் பொருட்களையும் உமது பணிகளின் முடிவுகளையும் நான் அல்லாஹ்விடம் ஒப்படைக்கிறேன்.)

**தனியாகப் பயணம் செய்வது வெறுக்கத்தக்கது**

ஒரு மனிதன்- தன்னுடன் பயணம் செல்வதற்கு துணை இருக்கும் பட்சத்தில்- அவசிய மில்லாமல் தனியாகப் பயணம் செய்வது வெறுக்கத்தக்கதாகும். ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்: "தனிமையில் (பயணம் செய்வதில்) உள்ள, நான் அறிந்திருக்கின்ற கேடுகளை மக்கள் அறிந்து கொண் டால் எந்தப் பயணியும் இரவில் தனியாகப் பயணம் செய்ய மாட்டார்." அறிவிப்பவர்: இப்னு உமர் (ரலி), நூல்: புகாரி 2998

عَنْ ابْنِ عُمَرَ عَنْ النَّبِيِّ ﷺ قَالَ لَوْ يَعْلَمُ النَّاسُ مَا فِي الْوَحْدَةِ مَا أَعْلَمُ مَا سَارَ رَاكِبٌ بِلَيْلٍ وَحْدَهُ (خ/ ٢٩٩٨)

அதுமட்டுமல்ல பயணத்தில் ஏதேனும் தீங்கு ஏற்படும் போது அல்லாஹ்வுக்குப் பிறகு அவனுக்கு உதவி செய் பவர் யாரும் இருக்க மாட்டார்; அவன் தன்னந்தனியாக விடப்படுவான் என்ற காரணத்தினாலும் தனியாகப் பயணம் மேற்கொள்ளக் கூடாது.

**நல்லதொரு துணையைத் தேடுதல்**

பயணம் மேற்கொள்பவர் இறையச்சமுடைய, தூய நண்பரைத் தேடுவது விரும்பத்தக்கதாகும். அந்த நண்பர் நன்மையை விரும்புபவராகவும், தீமையை வெறுப்பவ ராகவும், சகிப்புத்தன்மை உடையவராகவும் இருக்க வேண்டும். அவ்விருவரும் ஒருவர் மற்றவரைப் பொறுத்

துக் கொள்ள வேண்டும். மேலும் தன்னனை விட தன் நண்பருக்கு ஒருபடி உயர்வும் மரியாதையும் இருப்ப தாகக் கருத வேண்டும்.

**ஒரு பெண் தனியாகப் பயணம் செய்யக் கூடாது**

ஒரு பெண், திருமணம் செய்யத் தடுக்கப்பட்ட உறவி னரின் துணையின்றி தனியாகப் பயணம் செய்வது கூடாது. அப்பயணம் நீண்ட தூரப் பயணமாக இருந் தாலும் சரி, குறைந்த தூரப் பயணமாக இருந்தாலும் சரி. தரைவழிப் பயணமாக இருந்தாலும் சரி, ஆகாய வழிப் பயணமாக இருந்தாலும் சரி. ஏனெனில் நபி(ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்: "ஒரு பெண், தான் திருமணம் செய்யத் தடுக்கப்பட்ட உறவினருடனேயே தவிர பயணம் மேற்கொள்வது கூடாது." (புகாரி 1862, முஸ்லிம் 1341)

((لَا تُسَافِرْ الْمَرْأَةُ إِلَّا مَعَ ذِي مَحْرَمٍ)) (خ/ ١٨٦٢، م/ ١٣٤١)

அநேக பெண்கள் விமானத்தில் தனியாகப் பயணம் செய்வதை அலட்சியமாகக் கருதுகின்றனர். இது ஷரீஅத் திற்கு முரணானது மட்டுமல்ல இதில் பெரும் கெடுதிகள் உள்ளன. ஏனெனில் பெண்ணுடைய விவகாரம் சோதனை யாகும். அவள் தனித்திருப்பது அவளுக்குத் தீங்கு நேர்வதற்குக் காரணமாகிவிடும். ஏனெனில் அவள் தனித் திருப்பதன் மூலம் ஷைத்தானுக்கு ஆண்களைக் கெடுக்க வழி கிடைத்துவிடுகிறது. ஷைத்தான் அவள் மூலம் ஆண்களின் உணர்வுகளைத் தூண்டுகிறான். அவர்

களை அவள் பக்கம் அழைக்கிறான். எனவே பயணம் என்று எதற்கெல்லாம் சொல்லப்படுகிறதோ அதில் ஒரு பெண் தனியாகச் செல்வது கூடாது. மேலும் அவள் அது பயணமா இல்லையா என்றுதான் பார்க்க வேண் டுமே தவிர எதில் பயணம் செய்கிறோம் என்று பார்க்கக் கூடாது.

திருமணம் செய்யத்தகாத உறவினர் என்பது ஆணா கவும், பருவ மடைந்த, புத்தி சீர்நிலையில் உள்ள, முஸ்லிமாகவும் இருக்க வேண்டும். மேலும் அவர் பெண் ணுடைய இரந்த பந்த உறவினராக இருக்க வேண்டும். அவளது உறவு முறையில் உள்ளவராக இருந்தாலும் சரி. அல்லது பால்குடி உறவைச் சேர்ந்தவராக இருந் தாலும் சரி.

**பயண துஆவை ஓதுதல்**

பயணம் செய்பவர் பயணம் புறப்படும்போது பயண துஆவை ஓதிக்கொள்வது சுன்னத்தாகும். அந்த துஆ வருமாறு:

اَللهُ أَكْبَرُ اَللهُ أَكْبَرُ اَللهُ أَكْبَرُ سُبْحَانَ الَّذِيْ سَخَّرَ لَنَا هَذَا وَمَا كُنَّا لَهُ مُقْرِنِيْنَ وّإِنَّا إِلَى رَبِّنَا لَـمُنْقَلِبُوْنَ ، اَللَّهُمَّ إِنَّا نَسْأَلُكَ فِيْ سَفَرِنَا هَذَا الْبِرَّ وَالتَّقْوَى وَمِنَ الْعَمَلِ مَا تَرْضَى، اَللَّهُمَّ هَوِّنْ عَلَيْنَا سَفَرَنَا هَذَا وَاطْوِ عَنَّا

بُعْدَهُ، اَللَّهُمَّ أَنْتَ الصَّاحِبُ فِى السَّفَرِوَالْخَلِيْفَةُ فِى الْأَهْلِ، اَللَّهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِكَ مِنَ وَعْثَاءِ السَّفَرِ وَكَآبَةِ الْـمَنْظَرِ وَسُوْءِ الْـمُنْقَلَبِ فِي الْـمَالِ وَالْأَهْلِ

அல்லாஹு அக்பர் அல்லாஹு அக்பர் அல்லாஹு அக்பர் சுப்ஹானனல்லதீ ஸக்கரலனா ஹாதா வமா குன்னா லஹு முக்ரினீன் வஇன்னா இலா ரப்பினா லமுன் கலிபூன். அல்லாஹும்ம இன்னா நஸ்அலுக ஃபீ ஸஃப ரினா ஹாதா அல்பிர்ர வத்தக்வா வமினல் அமலி மா தர்ழா அல்லாஹும்ம ஹவ்வின் அலைனா ஸஃபரனா ஹாதா வத்வி அன்னா புஃதா அல்லாஹும்ம அன்தஸ் ஸாஹிபு ஃபிஸ் ஸஃபர் வல்கலீஃபது ஃபில் அஹ்ல், அல்லாஹும்ம இன்னீ அவூதுபிக மின் வஃஸாயிஸ் ஸஃபர், வகஆபதில் மன்ழர்,வசூயில் முன்கலபி ஃபில் மாலி வல்அஹ்ல். என்று கூற வேண்டும். (முஸ்லிம் 1342)

(**பொருள்:** அல்லாஹ் பெரியவன்! அல்லாஹ் பெரிய வன்! அல்லாஹ் பெரியவன்! இதனை வசப்படுத்தித் தந்தவன் தூயவன். உண்மையில் இதனை வசப்படுத்தும் ஆற்றலை நாம் பெற்றிருக்கவில்லை. திண்ணமாக நாம் நம் இரட்சகனின் பக்கமே திரும்பிச் செல்பவர்களாக இருக்கிறோம். இறைவா! இப்பயணத்தில் நன்மையையும் இறையச்சத்தையும் நாங்கள் உன்னிடம் கோருகிறோம். உனக்குத் திருப்தியான அமல்களைச் செய்யும் பாக்கி யத்தைக் கேட்கிறோம். இறைவா! இப்பயணத்தை எங்க

ளுக்கு எளிதாக்குவாயாக! அதன் தூரத்தை எங்க ளுக்குச் சுருக்கிவிடுவாயாக! இறைவா! நீயே பயணத் தின் தோழன்! எங்கள் குடும்பத்தாரின் பிரதிநிதி! இறைவா! பயணத்தின் சிரமங்கள், கவலையான தோற்றம், பொருளிலும் குடும்பத்திலும் நட்டத்தோடு திரும்பி வருவது ஆகியவற்றை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்)

பயணத்திலிருந்து திரும்பி வரும்போது மேற்கூறப்பட்ட துஆவையும் அத்துடன் “ஆயிபூன தாயிபூன ஆபிதூன லிரப்பினா ஹாமிதூன்” என்பதையும் சேர்த்து ஓத வேண்டும். (முஸ்லிம் 1342)

آيِبُوْنَ تَائِبُوْنَ عَابِدُوْنَ لِرَبِّنَا حَامِدُوْنَ

(**பொருள்:** திரும்பி வருகிறோம் பாவமன்னிப்புத் தேடு கிறோம் வழிபாடு செய்பவர்களாய் இருக்கிறோம் எங்கள் இரட்சகனைப் புகழக்கூடியவர்களாயும் இருக்கிறோம்.)

**தலைவரைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளல்**

பயணம் செய்வோர் தங்களில் ஒருவரைத் தலைவராக நியமித்துக் கொள்வது சுன்னத்தாகும்.

عَنْ أَبِي سَعِيدٍ الخُدْرِيِّ أَنَّ رَسُولَ الله ﷺ قَالَ إِذَا خَرَجَ ثَلَاثَةٌ فِي سَفَرٍ فَلْيُؤَمِّرُوا أَحَدَهُمْ (د/ ٢٦٠٨)

“மூன்று பேர் ஒரு பயணத்தில் சென்றால் தம்மில் ஒருவரை அவர்கள் தலைவராக நியமித்துக் கொள் ளட்டும்” என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். அறிவிப் பவர்: அபூஸயீத் (ரலி), நூல்: (அபூதாவூத் 2608) தலை வரைத் தேர்ந்தெடுத்துக் கொள்வதன் நோக்கம் பயணி கள் கருத்து வேறுபாடு கொள்ளும்போது அவர் அவர் களை ஒத்த கருத்துக்குக் கொண்டு வந்து, அவர்களின் நலனுக்காகப் பாடுபட வேண்டும் என்பதற்காகத்தான். அவர் பாவமான காரியத்தை ஏவாத வரை அவருக்குக் கட்டுப்பட்டு நடப்பது பயணிகளின் கடமையாகும்.

**ஓர் இடத்தில் இறங்கும்போது ஓத வேண்டிய துஆ**

பயணத்தில் ஏதாவது ஓர் இடத்தில் இறங்கினால் “அவூது பிகலிமாத் தில்லாஹித் தாம்மாத்தி மின்ஷர்ரிமா கலக்” என்று கூறுவது விரும்பத்தக்கதாகும்.

أَعُوْذُ بِكَلِمَاتِ اللهِ التَّامَّاتِ مِنْ شَرِّ مَا خَلَقَ

(**பொருள்:** அல்லாஹ்வின் பரிபூரணமான வார்த்தை களைக் கொண்டு அவன் படைத்த அனைத்தின் தீங்கு களை விட்டும் பாதுகாப்புத் தேடுகிறேன்.)

மேற்கண்ட வாசகத்தை யார் கூறுகிறாரோ அவ்விடத் திலிருந்து அவர் புறப்படும் வரை அவருக்கு எந்தத் தீங்கும் ஏற்படாது. (பார்க்க: முஸ்லிம் 2708)

**தக்பீரும், தஸ்பீஹும் சொல்லுதல்**

வழியில் உயரமான இடத்தில் ஏறும்போது அல்லாஹு அக்பர் என்றும், தாழ்வான இடத்தில் இறங்கும் போது சுப்ஹானல்லாஹ் என்றும் கூறுவது சுன்னத்தாகும். ஏனெனில் ஜாபிர்(ரலி) அவர்கள் அறிவிக் கிறார்கள்: “நாங்கள் (பயணத்தில்) உயரமான இடத்தில் ஏறினால் தக்பீர் சொல்வோம். தாழ்வான இடத்தில் இறங் கினால் தஸ்பீஹ் சொல்வோம்.” (புகாரி 2993)

**அதிகமதிகம் துஆ செய்தல்**

பயணத்தில் அதிகமதிகம் துஆ செய்வது சுன்னத் தாகும். ஏனெனில் நபி(ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்: “மூன்று பிரார்த்தனைகள் ஏற்றுக் கொள்ளப்படும். அதில் எந்தச் சத்தேகமும் கிடையாது. அவை: அநீதியிழைக் கப்பட்டவனின் பிரார்த்தனை, பயணியின் பிரார்த்தனை, தந்தை தன் பிள்ளைக்குச் செய்யும் பிரார்த்தனை ஆகிய னவாகும்.” நபிமொழி. (திர்மிதி 1905, அபூதாவூத் 1313) இந்த ஹதீஸ் ஹஸன் எனும் தரத்தில் அமைந்ததாக அல்பானி கூறுகிறார்.

**ஊரினுள் நுழையும்போது ஓத வேண்டிய துஆ**

பயணி ஒரு ஊரினுள் நுழையும்போது பின்வரும் துஆவை ஓதுவது சுன்னத்தாகும்.

« اَللَّهُمَّ رَبَّ السَّمَاوَاتِ السَّبْعِ وَمَا أَظْلَلْنَ ، وَرَبَّ الأَرْضِيْنَ السَّبْعِ وَمَا أَقْلَلْنَ ، وَرَبَّ الشَّيَاطِيْنَ وَمَا أَضْلَلْنَ ، وَرَبَّ الرِّيَاحِ وَمَا ذَرَيْنَ ، فَإِنَّا

نَسْأَلُكَ خَيْرَ هَذِهِ الْقَرْيَةِ ، وَخَيْرَ أَهْلِهَا ، وَنَعُوْذُ بِكَ مِنْ شَرِّهَا ، وَشَرِّ أَهْلِهَا ، وَشَرِّ مَا فِيْهَا . (الحاكم : ج ٦ / ص ٩٥)

அல்லாஹும்ம ரப்பஸ் ஸமாவாத்திஸ் ஸப்யி வமா அழ்லல்ன, வரப்பல் அர்ளீனஸ் ஸப்யி வமா அக்லல்ன, வரப்பஷ் ஷயாத்தீன அவமா அள்லல்ன, வரப்பர் ரியாஹி வமா தரய்ன, ஃபஇன்னா நஸ்அலுக கைர ஹாதிஹில் கர்யதி, வகைர அஹ்லிஹா வகைரமா ஃபீஹா, வநவூதுபிக மின்ஷர்ஹா வஷர்ரி அஹ்லிஹா, வஷர்ரிமா ஃபீஹா

(**பொருள்:** இறைவா! ஏழு வானங்கள் மற்றும் அவை நிழலிட்டுள்ள பொருட்களின் இரட்சகனே! ஏழு பூமிகள் மற்றும் அவை சுமந்துள்ள பொருட்களின் இரட்சகனே! ஷைத்தான்களுக்கும் அவை வழிகெடுத்துள்ளவற்றுக்கும் இரட்சகனாக இருப்பவனே! காற்றுகள் மற்றும் அவை சுழற்றியடிக்கும் பொருட்களின் இரட்சகனே! நான் இந்த ஊரின் நன்மையையும் இதில் வசிப்பவர்களின் நன்மை யையும் இதிலுள்ள பொருட்களின் நன்மையையும் உன் னிடம் கோருகிறேன். மேலும் இந்த ஊரின் தீமையை விட்டும் இதில் வசிப்பவர்களின் தீமையை விட்டும் இதில் உள்ள பொருட்களின் தீமையை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.) (ஹாகிம்: பாகம்: 6, பக்கம் 95)

**தொல்லை தருவதை விட்டும் தவிர்ந்து கொள்ளல்**

இது விஷயத்தில் பயணிகள் மிகுந்த அக்கரை எடுத்துக் கொள்ள வேண்டும். தொல்லை தருதல் என்பது வாகனத்தில் அசுர வேகத்தில் செல்வதன் மூலமாகவோ போக்குவரத்து சமிஞ்சைகளை (சிக்னல்களை) தாண்டிச் செல்வதன் மூலமாகவோ போக்குவரத்து விதிகளை மீறுவதன் மூலமாகவோ அல்லது வேறு எந்த வகையில் இந்தாலும் சரி. அவ்வாறு தொல்லை தருவது கூடாது.

﴿ وَالَّذِينَ يُؤْذُونَ الْمُؤْمِنِينَ وَالْمُؤْمِنَاتِ بِغَيْرِ مَا اكْتَسَبُوا فَقَدِ احْتَمَلُوا بُهْتَانًا وَإِثْمًا مُبِينًا ﴾ [الأحزاب:٥٨]

நம்பிக்கை கொண்ட ஆண்களுக்கும் பெண்களுக்கும்- அவர்கள் குற்றம் புரியாதிருக்கவே எவர்கள் துன்பம் அளிக்கிறார்களோ அவர்கள் அவதூறையும் தெளிவான பாவத்தையும் சுமந்து கொண்டவராவார்கள். (33:58)

**பாதைக்குரிய கடமையை நிறைவேற்றுதல்**

பாதைக்குரிய கடமை என்பது நபி (ஸல்) அவர்கள் கூறியதுபோல "(அந்நியப் பெண்களை விட்டும்) பார்வையைத் தாழ்த்திக் கொள்வது, (பிறருக்குத்) தொல்லை தராமல் இருப்பது, ஸலாமுக்குப் பதில் சொல்வது, நன்மையை ஏவுவது, தீமையைத் தடுப்பது" ஆகியனவாகும். (பார்க்க: புகாரி 2465, முஸ்லிம் 2121)

**வேலை முடிந்ததும் திரும்பிவிடுதல்**

பயணம் மேற்கொண்டவர் தமது வேலை முடிந்ததும் தாமதிக்காமல் வீடு திரும்புவது விரும்பத்தக்கதாகும். ஏனெனில் நபி(ஸல்)அவர்கள் கூறியுள்ளார்கள்: “பயணம் வேதனையின் ஒரு பகுதியாகும். அது உங்களை உறங்க விடாமலும் உண்ண, பருக விடாமலும் தடுத்து விடும். ஆகவே உங்களில் ஒருவர் (பயணத்தில்) தன் தேவையை முடித்துக் கொண்டு விட்டால் அவர் தனது வீட்டாரிடம் விரைவாக திரும்பிச் சென்றுவிடட்டும்.” (பார்க்க: புகாரி 3001, முஸ்லிம் 1927)

((السَّفَرُ قِطْعَةٌ مِنْ الْعَذَابِ يَمْنَعُ أَحَدَكُمْ نَوْمَهُ وَطَعَامَهُ وَشَرَابَهُ فَإِذَا قَضَى أَحَدُكُمْ نَهْمَتَهُ فَلْيُعَجِّلْ إِلَى أَهْلِهِ)) خ/ ٣٠٠١، م/ ١٩٢٧)

**பயணத்திலிருந்து திரும்பியதும் முதலில் பள்ளிக்கு வருதல்**

பயணத்திலிருந்து திரும்பி வந்ததும் முதலில் பள்ளி வாசலுக்கு வந்து இரண்டு ரக்அத் தொழுவது சுன்னத் ஆகும். ஏனெனில் கஅப் இப்னு மாலிக் (ரலி) அறிவிக் கிறார்கள்: ((وَكَانَ إِذَا قَدِمَ مِنْ سَفَرٍ بَدَأَ بِالْمَسْجِدِ فَيَرْكَعُ فِيهِ رَكْعَتَيْنِ))

“நபி (ஸல்) அவர்கள் பயணத்திலிருந்து திரும்பி வந்தால் முதலில் பள்ளிக்கு வந்து இரண்டு ரக்அத் தொழுவார்கள்.” (புகாரி 4418, முஸ்லிம் 2769)

**பயணத்திலிருந்து திரும்பி வந்தவரை கட்டியணைத்தல்**

பயணத்திலிருந்து திரும்பி வந்தவரை வரவேற்பதற்காக எழுந்து நிற்பதும் அவரைக் கட்டி அணைப்பதும், அவரைச் சந்திக்கச் செல்வதும் விரும்பத்தக்கதாகும். நபித்தோழர்கள் தமது பயணத்திலிருந்து திரும்பி வந்தால் ஒருவரையொருவர் கட்டியணைத்துக் கொள்வார்கள். இவ்வாறு செய்வது அன்பையும் பாசத்தையும் பிணைப்பையும் ஏற்படுத்துவதுடன் உள்ளங்களிடையே ஒற்றுமையையும் உண்டாக்கும். இத்தகைய விஷயங்கள் தாம் இன்றைக்கு நமக்கு அதிகம் தேவைப்படுகின்றன.

**பயணியின் நற்கூலி**

தன் அடியார்களுக்கு அல்லாஹ் வழங்கிய அருட்கொடைகளில் இதுவும் ஒன்றாகும். அதாவது ஒரு நோயாளிக்கு அல்லது ஒரு பயணிக்கு அவர் ஆரோக்கியமாகவும் ஊரில் தங்கியிருக்கும் போதும் செய்து கொண்டிருந்த அமல்களுக்குரிய கூலி எழுதப்படும்.

عن أَبِي مُوسَى قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ إِذَا مَرِضَ الْعَبْدُ أَوْ سَافَرَ كُتِبَ لَهُ مِثْلُ مَا كَانَ يَعْمَلُ مُقِيمًا صَحِيحًا (خ/ ٢٩٩٦)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: “ஒரு அடியான் நோயுற்றால் அல்லது பயணம் மேற்கொண்டால்- அவர் ஆரோக்கியமாகவும் தமது சொந்த ஊரில் இருக்கும் போதும் செய்து கொண்டிருந்த நற்செயல்களுக்குரிய கூலி போன்று அவருக்கு எழுதப்படும்.” அறிவிப்பவர்: அபூமூஸா(ரலி), நூல்: புகாரி 2996, அபூதாவூத் 3091

**பயணத்தின் சலுகைகள்**

பயணத்திற்குரிய சலுகைகளை பயணிகள் பயன் படுத்திக் கொள்ள வேண்டும் என்பதே ஷரீஅத்தின் நடை முறையாகும். முஸ்லிம்களுக்கு இலகுவாக இருக்க வேண்டும் என்பதற்காக இஸ்லாமிய மார்க்கம் இச்சலு கைகளை வழங்கியுள்ளது. எனவே ஒரு பயணி தனது ஊரின் எல்லையைக் கடந்ததிலிருந்து இச்சலுகைகளைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

பயணத்தின் சலுகைகள் வருமாறு: நான்கு ரக்அத் தொழுகைகளை இரண்டு ரக்அத்தாக சுருக்கி (கஸ்ராக) தொழுவது, ஒரு தொழுகையை மற்றொரு தொழுகை யுடன் சேர்த்து (ஜம்வுவாக) தொழுவது, மூன்று நாட்க ளுக்கு காலுறைகள் மீது மஸஹ் செய்வது, வாகனத்தின் மீது அமர்ந்து ந.ஃபில் தொழுவது, ஜும்ஆ தொழாம லிருப்பது, நோன்பை விட்டுவிடுவது ஆகியனவாகும்.

**கஸர் தொழுகைக்குரிய பயண தூரம்**

1. பயணம் என்று எதற்குச் சொல்லப்படுமோ அவை அனைத்திலும் நான்கு ரக்அத்து தொழுகைகளைச் சுருக்கி இரண்டு ரக்அத்தாக தொழுவதும், ளுஹரை அஸருடனும் அஸரை ளுஹருடனும் சேர்த்து தொழு வதும் ம.ஃக்ரிபை இஷாவுடனும் இஷாவை ம.ஃக்ரி புடனும் சேர்த்து தொழுவதும் ஒரு பயணிக்கு ஆகுமா

னதாகும். ஆனால் கஸர், ஜம்வு செய்வதற்குரிய பயண தூரத்திற்கு ஷரீஅத்தில் வரையறை ஏதும் இல்லை.

பொரும்பாலான அறிஞர்களின் கருத்து என்னவெனில் பயண தூரம் 80 கி. மீட்டருக்கு மேல் இருந்தால் கஸர் செய்யலாம் என்பதே. 80 கி. மீட்டருக்கு கீழ் இருந்தால் கஸர் செய்வதை அவர்கள் தடை செய்கி றார்கள். இந்த வரையறை மிகச் சரியானதும் நுட்பமானதுமாகும் என்பதில் எவ்வித சந்தேகமுமில்லை. (சுருக்கித் தொழு வதற்குரிய பயண தூரம் எவ்வளவு என்பதில் கருத்து வேறுபாடுள்ளது. -மொழிபெயர்ப்பாளர்.)

**தூய்மையின் சட்டங்கள்**

தொழுகைக்காக உளு செய்வதும், பெருந் தொடக்கு ஏற்பட்டால் குளிப்பதும் கடமையாகும். இதில் அலட்சியம் செய்வது கூடாது. ஆனால் ஒரு பயணிக்கு தொழுகை யின் நேரம் வந்து விட்டால் அப்போது தண்ணீர் கிடைக் கவில்லை எனில் பின்வரும் சட்டநிலைகள் அவனுக்கு ஏற்படுகின்றன:

1. தண்ணீர் கிடைத்துவிடும் என்ற உறுதி அவனுக்கு இருந்தால் அல்லது பெரும்பாலும் தண்ணீர் கிடைத்து விடும் என்ற நம்பிக்கை இருந்தால் தொழுகையை அதன் கடைசி நேரம் வரை அவன் பிற்படுத்த வேண்டும்.

2. தண்ணீர் இல்லை என்பதை அவன் உறுதி செய்து விட்டால் அல்லது பெரும்பாலும் தண்ணீர் இல்லை தான்

என்ற முடிவுக்கு அவன் வந்துவிட்டால் அவன் தயம்மும் செய்து தொழுகையை அதன் ஆரம்ப நேரத்தில் தொழுது விடுவதே சிறப்பாகும்.

❖ தயம்மும் செய்து தொழுது கொண்டிருக்கும்போது தண்ணீர் கிடைத்து விட்டால் அந்தத் தொழுகையை ந.ஃ.பிலாக மாற்றி அதனை நிறைவு செய்ய வேண்டும். பிறகு உளூ செய்து விட்டு கடமையான தொழுகையைப் புதிதாக திரும்பத் தொழ வேண்டும். தயம்மும் செய்து தொழுத பிறகு தண்ணீர் கிடைத்துவிட்டால் அவனது தொழுகை நிறைவேறிவிடும்; திரும்பவும் தொழ வேண்டியதில்லை.

❖ ஒரு பயணிக்கு குளிப்பு கடமையாகி, அவனால் தண்ணீரைப் பயன்படுத்த முடியவில்லை எனில்-காரணம் கடும் குளிரின் காரணமாக தனக்கு ஏதும் தீங்கு நேர்ந்து விடுமோ என்று அவன் அஞ்சுகிறான், அல்லது தொழுகையின் நேரம் தவறிவிடுமோ என்று பயப்படுகிறான் எனில் தயம்மும் செய்வது அவனுக்கு ஆகுமானதாகும். இவ்வாறே குளிப்பதற்குப் போதாத அளவுக்கு தண்ணீர் குறைவாக இருந்தால் அந்தத் தண்ணீரைக் கொண்டு உளூ செய்து விட்டு, குளிப்பதற்குப் பதிலாக தயம்மும் செய்து கொள்ள வேண்டும்.

ஆனால் தயம்மும் செய்வதற்கு குளிரை அஞ்சுவது மட்டும் போதுமான காரணமாக அமையாது. மாறாக

அதனால் தனக்குத் தீங்கு ஏற்படும் என்ற எதிர்பார்ப்போ அல்லது அநேகமாக அதனால் தீங்கு ஏற்படலாம் என்ற எண்ணமோ இருக்க வேண்டும். மேலும் குளிர் காய்வதற் குரிய சாதனம் ஏதும் அவனிடம் இல்லாமலிருக்க வேண்டும். அல்லது குளிர் காய்வதற்குரிய சாதனம் இருந்து அதன் மூலம் குளிர்காய்ந்து கொண்டிருக்கும் போது தொழுகையின் நேரம் தவறிவிடுமோ என்ற அச்சம் இருக்க வேண்டும். இதுபோன்ற நிலையில்தான் தயம்மும் செய்வது அவனுக்குக் கூடும்.

❖ முழுமையாக உளூ செய்வதற்குப் போதாத அளவுக்கு தண்ணீர் குறைவாக இருந்தால் இருக்கின்ற தண்ணீரை வைத்து உளூ செய்துவிட்டு, தண்ணீர் படாத உறுப்புக்களுக்காக தயம்மும் செய்து கொள்ள வேண்டும்.

**தயம்மும் செய்யும் முறை**

சிறு தொடக்கையும் பெருந்தொடக்கையும் நீக்குவற் காக தயம்மும் செய்யும் முறை வருமாறு: இரண்டு கைகளையும் பூமியில் ஒரு முறை அடித்து முகத்திலும் இடது கையை வலது புறங்கை மீதும் வலது கையை இடது புறங்கை மீதும் (மணிக்கட்டு வரை) தடவிக் கொள்ள வேண்டும். பெருந்தொடக்கை நீக்குவற்காக தயம்மும் செய்தவர் பிறகு தண்ணீர் கிடைத்ததும் குளிப்பது கடமையாகும்.

**காலுறைகளின் மீது மஸஹ் செய்தல்**

ஒரு பயணி மூன்று நாட்களுக்கு காலுறைகள் மீது மஸஹ் செய்து கொள்ளலாம். முதல் தடவை மஸஹ் செய்ததிலிருந்து இதன் கால அளவு ஆரம்பமாகின்றது.

ஒருவன் ஊரில் இருக்கும்போது காலுறைகள் மீது மஸஹ் செய்து விட்டு பின்பு பயணம் மேற்கொண்டால் பயணத்தில் இருப்பவர் மஸஹ் செய்வது போல (மூன்று நாட்களுக்கு) மஸஹ் செய்து கொள்ள வேண்டும்.

ஒருவர் பயணத்தில் இருக்கும்போது மஸஹ் செய்து விட்டு பின்பு ஊர் திரும்பி விட்டால் அவர் ஊரில் தங்கியிருப்பவர் மஸஹ் செய்வது போல செய்து கொள்ள வேண்டும். அது (ஒரு நாள்) ஒரு பகல் ஒரு இரவு ஆகும்.

**பாங்கின் சட்டங்கள்**

❖ பயணிகள் ஜமாஅத்துடன் தொழும்போது பாங்கு இகாமத் சொல்வது அவசியமாகும்.

((فَإِذَا حَضَرَتْ الصَّلَاةُ فَلْيُؤَذِّنْ لَكُمْ أَحَدُكُمْ وَلْيَؤُمَّكُمْ أَكْبَرُكُمْ)) (خ، م)

ஏனெனில் “தொழுகை நேரம் வந்துவிட்டால் உங்களில் ஒருவர் பாங்கு சொல்லிக் கொள்ளட்டும்” என்று நபி (ஸல்) கூறியுள்ளார்கள். (புகாரி 631, முஸ்லிம் 674)

இவ்வாறே தனியாகத் தொழுபவரும் பாங்கு சொல்லிக் கொள்ள வேண்டும். ஆனால் வழக்கமாக தொழுகை நடைபெறக்கூடிய பள்ளிவாசலில் அவர் தொழுவதாக

இருந்தால் அங்கு சொல்லப்படக்கூடிய பாங்கே போதுமானதாகும்.

❖ பாங்கு இகாமத் இன்றி அல்லது வெறும் இகாமத்துடன் தொழுகை நிறைவேற்றப்பட்டால் அந்தத் தொழுகை நிறைவேறிவிடும். ஆனால் (பாங்கு இகாமத் இன்றி) ஜமாஅத்துடன் தொழுதவர்கள் பாவமன்னிப்புக் கோரி அல்லாஹ்விடம் திரும்பிவிட வேண்டும். திரும்பவும் அவ்வாறு செய்யக்கூடாது. இதுவே பாங்கு சொல்வது கடமை என்று கருதுபவர்களின் கூற்றாகும். இதுவே சிறந்த கூற்று.

❖ பயணத்திலிருப்பவர் இரண்டு தொழுகைகளைச் சேர்த்து (ஜம்வு செய்து) தொழுதால் ஒரு பாங்கும் இரண்டு இகாமத்தும் சொல்லிக் கொள்ள வேண்டும்.

**தொழுகையின் சட்டங்கள்**

கிப்லாவின் திசையைக் கண்டறிவது பயணியின் கடமையாகும். அதனை யாரிடமேனும் கேட்டுத் தெரிந்து கொள்ள முயற்சிக்க வேண்டும். அல்லது திசையை அறிய உதவும் கருவிகளைப் பயன்படுத்தியோ அல்லது வேறு வகையிலோ கிப்லாவின் திசையைத் தெரிந்து கொள்ள முயற்சிக்க வேண்டும். கிப்லாவின் திசையைத் கண்டறியாமலும் அதற்காக முயற்சிக்காமலும் வேறு திசையை நோக்கி ஒருவர் தொழுதால் அவர் (கிப்லாவின் திசையை அறிந்ததும்) திரும்பத் தொழ வேண்டும். ஏனெ

னில் அவர் தவறிழைத்து விட்டார். ஆயினும் மிகுந்த முயற்சிக்குப் பிறகு ஒருவர் வேறு திசையை நோக்கித் தொழுதால் அவர் திரும்பத் தொழ வேண்டியதில்லை. அதுவும் அவர் பாலைவனத்தில் தொழுதால் தான். ஆனால் ஏதேனும் ஒரு ஊரில் இவ்வாறு தொழுதால் (கிப்லாவின் திசையை அறிந்ததும்) அவர் திரும்பத் தொழுவது அவசியமாகும்.

❖ வழமையாகத் தொழ வேண்டிய ராத்திபு சுன்னத்து களை பயணத்தில் தொழுவது சுன்னத் அல்ல. ஃபஜ்ரு டைய சுன்னத்தைத் தவிர. இதுபோல பயணத்தில் வித்ரு தொழுவது விரும்பத்தக்கதாகும். மேலும் லுஹா தொழுகை, இரவுத் தொழுகை (தஹஜ்ஜத்), இன்னும் காரண காரியங்களை முன்னிட்டு நிறைவேற்றப்படும் உளூவுடைய சுன்னத், தஹிய்யதுல் மஸ்ஜித் எனும் பள்ளிவாசல் காணிக்கைத் தொழுகை, கிரகணத் தொழுகை போன்ற தொழுகைகளை எல்லாம் அவர் ஊரில் தங்கியிருக்கும்போது தொழுவதுபோல் (பயணத் திலும்) தொழுது கொள்ளலாம்.

❖ தொழுகையின் நேரம் வந்த பிறகு ஒருவர் பயணம் மேற்கொண்டால் அவர் தமது ஊரின் எல்லையைக் கடந்த பிறகே சுருக்கித் தொழுவதும் சேர்த்துத் தொழு வதும் அவருக்குக் கூடும்.

❖ நான்கு ரக்அத் தொழுகைகளைத் தான் சுருக்கித் தொழ வேண்டும். ஃபஜ்ரு தொழுகையும் மஃக்ரிப் தொழு கையும் சுருக்கப்பட மாட்டாது.

❖ கஸ்ர் தொழும்போது கஸ்ரை நிய்யத் செய்வது நிபந்தனை கிடையாது. ஏனெனில் கஸ்ராகத் தொழுவது தான் பயணத்தில் அடிப்படையாக இருக்கிறது. எனவே கஸ்ரை நிய்யத்து செய்வதற்கு அவசியமில்லை. சொந்த ஊரில் தங்கியிருக்கும்போது (கஸ்ராக இல்லாமல் முழுமையாகத் தொழுகிறேன் என்ற நிய்யத் இன்றி) நாம் முழுமையாகத் தொழுவதைப் போலத்தான் இதுவும். ஆனால் பயணத்தில் கஸ்ரை நிய்யத் செய்து கொண் டால் அது சிறப்பே.

❖ ஒரு பயணி முழுமையாகத் தொழும் நிய்யத்துடன் இமாமைப் பின்தொடர்கிறார். ஆனால் இமாம் அந்தத் தொழுகையை கஸ்ராகத் தொழுவித்தால் இமாமைப் போல் பயணியும் கஸ்ராகத்தான் தொழ வேண்டும்.

❖ கஸ்ராகத் தொழும் நிய்யத்துடன் ஒரு பயணி இமாமைப் பின்தொடர்கிறார். ஆனால் அந்த இமாம் அந்தத் தொழுகையை முழுமையாகத் தொழுவித்தால் இமாமைப் பின்பற்றி பயணியும் முழுமையாகத் தொழுவது அவசியமாகும்.

❖ ஒரு பயணி இமாமைப் பின்பற்றித் தொழுகிறார். ஆனால் அந்த இமாம் பயணியா அல்லது சொந்த ஊரில்

தங்கியிருப்பவரா என்பது அவருக்குத் தெரியாது. இந்த நிலையில் இமாமைப் பின்தொடர்ந்து தொழுவது அவரது கடமையாகும்.

❖ ஒரு பயணி தாம் பயணி என்பதை மறந்து முழுமையாகத் தொழும் எண்ணத்துடன் தொழுகிறார். அவர் இமாமாக நின்று தொழுதாலும் சரி. அல்லது ஒரு இமாமைப் பின் தொடர்ந்து தொழுதாலும் சரி. பிறகு தாம் ஒரு பயணி என்பது நினைவுக்கு வந்தால் அவர் கஸ்ராகத்தான் தொழ வேண்டும். ஏனெனில் கஸ்ராகத் தொழுவதுதான் பயணியின் தொழுகையில் அடிப்படை. அவர் முழுமையாகத் தொழுதால் அது பற்றிக் குற்ற மில்லை.

❖ ஒரு பயணி தெரியாமல் ம.்.க்ரிபை கஸ்ராக-இரண்டு ரக்அத்தாக தொழுது விட்டால் அவரது தொழுகை வீணாகிவிடும். அந்தத் தொழுகையை அவர் திரும்பத் தொழ வேண்டும்.

❖ ஒரு பயணி கஸ்ருடைய நிய்யத்தில் தொழுது கொண்டிருக்கும்போது மறதியாக மூன்றாவது ரக்அத் துக்காக எழுந்துவிட்டால் அவர் திரும்பி வந்து அத்த ஹிய்யாத்தில் அமர்ந்து தொழுகையை நிறைவு செய்திட வேண்டும். ஸலாம் கொடுப்பதற்கு முன் மறதிக்காக இரண்டு ஸஜ்தா செய்து கொள்ள வேண்டும்.

❖ பயணத் தொழுகையில் இமாம் கிராஅத்தை சுருக்கி ஓதுவது விரும்பத்தக்கதாகும். ஏனெனில் நபி

(ஸல்) அவர்களும் அவர்களின் தோழர்களும் இவ்வாறு செய்துள்ளதாக அறிவிக்கப்பட்டுள்ளது.

❖ ஒரு பயணி ஒரு ஊரில் தங்கிவிட்டால் அவர் பாங்கு சொல்லப்படுவதை செவியேற்கும் போதெல்லாம் பள்ளிவாசலுக்குச் சென்று ஜமாஅத்துடன் தொழுகையை நிறைவேற்றுவது கடமையாகும். ஆனால் அவர் பயணம் சென்று கொண்டிருக்கும் வழியில் பாங்கு சப்தத்தைக் கேட்டால் பள்ளிவாசலுக்குச் சென்று தொழ வேண்டும் என்ற அவசியமில்லை. ஏதேனும் தேவைக்காக அவர் அங்கு இறங்கினாலும் சரியே.

**குறிப்பு:** சொந்த ஊரில் தங்கியிருக்கும்போது விடுபட்ட தொழுகை ஒருவருக்கு பயணத்தில் நினைவுக்கு வந்தால், அல்லது அவர் பயணத்தில் இருக்கும்போது விடுபட்ட தொழுகை சொந்த ஊரில் தங்கும்போது நினைவுக்கு வந்தால், அந்தத் தொழுகையை அவர் (கஸ்ராக இல்லாமல்) முழுமையாகவே தொழ வேண்டும். ஏனெனில் அதுதான் பேணுதல் அடிப்படையாகும். கடமையிலிருந்து நீங்கிவிடுதலுமாகும்.

ஒரு பயணத்தில் விடுபட்ட தொழுகை இன்னொரு பயணத்தில் நினைவுக்கு வந்தால் அவர் அதனைக் கஸராகவே நிறைவேற்ற வேண்டும்.

**பயணத்தில் இமாமைப் பின்பற்றி தொழுவதனுடைய சட்டங்கள்**

❖ பயணி அல்லாத இமாமைப் பின்பற்றி ஒரு பயணி தொழுவது கூடும். அவ்விருவருடைய நிய்யத்தோ தொழு கையோ வெவ்வேறாக இருப்பது குறித்து எந்த இடயூறும் இல்லை. ஏனெனில் முஆத் பின் ஜபல்(ரலி), அவர்கள் நபி(ஸல்)அவர்களுடன் இஷாவைத் தொழுதுவிட்டு தமது கூட்டத்தார்களிடம் சென்று அவர்களுக்கு இஷாவை தொழுவிப்பார்கள். இந்த இஷா அவருக்கு நபிலாகவும் அவரது கூட்டத்தாருக்கு ஃபர்லாகவும் அமையும். (பார்க்க: புகாரி 711, முஸ்லிம் 465)

❖ பயணி அல்லாத இமாமைப் பின்பற்றி ஒரு பயணி கஸ்ர் தொழுவது கூடாது. அப்பயணி தொழுகையின் ஆரம்பத்தில் வந்து இமாமுடன் சேர்ந்தாலும் சரி இறுதியில் வந்து சேர்ந்தாலும் சரி. ஏனெனில் “இமாம் ஏற்படுத்தப்பட்டிருப்பது பின்பற்றுவதற்குத்தான்” என நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். (பார்க்க: புகாரி 378, முஸ்லிம் 411)

❖ சில பயணிகள் நான்கு ரக்அத் தொழுகையில் கடைசி இரண்டு ரக்அத்தில் வந்து பயணி அல்லாத இமாமுடன் சேர்ந்து தொழுகின்றனர். அந்த இரண்டு ரக்அத்துடன் தமது தொழுகையை நிறைவு செய்துவிடு கின்றனர். இவ்வாறு செய்வது கூடாது. மாறாக அவர்கள் முழுமைப்படுத்தி (நான்கு ரக்அத்தாகத்) தான் தொழ வேண்டும். இரண்டு ரக்அத்துடன் தமது தொழுகையை

முடித்துக் கொண்டால் அந்தத் தொழுகையை அவர் திரும்பத் தொழ வேண்டும்.

❖ ஒரு இமாமைப் பயணி என எண்ணிக் கொண்டு ஒரு பயணி அவரைப் பின்பற்றித் தொழலானார். அவருடன் சேர்ந்து இரண்டு ரக்அத் தொழுது முடித்த பிறகு அந்த இமாம் முழுமைப்படுத்தித் தொழுபவர் என்று தெரியவந்தால் பயணியும் முழுமைப்படுத்தியே தொழ வேண்டும். ஆனால் இமாமுடைய நிய்யத்துடன் சம்பந்தப் படுத்தி அவர் நிய்யத்து செய்திருந்தால் அதாவது இமாம் கஸர் செய்தால் நானும் கஸர் செய்வேன்; இமாம் முழு மைப்படுத்தித் தொழுதால் நானும் முழுமைப்படுத்தித் தொழுவேன் என்று நிய்யத் செய்திருந்தால் அவரது தொழுகை நிறைவேறிவிடும்.

❖ ஒரு பயணி இஷா தொழுவதை நாடி ம.்.க்ரிப் தொழக்கூடிய இமாமுடன் சேர்ந்தால் அவர் இஷாவை நான்காக முழுமைப்படுத்தித்தான் தொழ வேண்டும். எவ்வாறெனில் இமாம் ஸலாம் கொடுத்ததும் எழுந்து நான்காம் ரக்அத்தைப் பூர்த்தி செய்து கொள்ள வேண்டும்.

❖ பயணி அல்லாத ஒருவர் பயணியைப் பின்பற்றித் தொழுவது கூடும். ஆனால் இமாம் ஸலாம் கொடுத்த பிறகு அவர் எஞ்சியுள்ள ரக்அத்தைப் பூர்த்தி செய்து கொள்ள வேண்டும்.

❖ பயணி அல்லாதோருக்கு ஒரு பயணி தொழுவித்தால் அவர் கஸ்ராகத்தான் தொழுவிக்க வேண்டும். அவர் ஸலாம் கொடுத்ததும் “உங்கள் தொழுகையை முழுமைப்படுத்திக் கொள்ளுங்கள்” என்று சொல்வது ஷரீஅத்தின் நடைமுறையாகும். தொழுகை நடத்துவதற்கு முன் இதனை அவர்களுக்கு உணர்த்தினால் அதுபற்றிக் குற்றமில்லை. ஏனெனில் அவர்களுக்குக் குழப்பம் ஏற்படாமல் இருப்பதற்காக.

❖ லுஹர் தொழாத ஒருவர் பள்ளிவாசலுக்குச் சென்று அங்கு இமாம் அஸர் தொழுவதைக் கண்டால் அவர் லுஹருடைய நிய்யத்துடன் இமாமுடன் சேர்ந்து கொள்ள வேண்டும். அவர்களுடன் சேர்ந்து தொழுது முடித்ததும் அஸ்ரைத் தொழுது கொள்ள வேண்டும்.

❖ ரமளானில் தராவீஹ் தொழக்கூடிய பயணி அல்லாத இமாமுடன் சேர்ந்து பயணிகள் தொழுதால் அவர்களுக்கு இரண்டு நிலைகள் உள்ளன.

1. அவர்கள் தங்கள் சொந்த ஊருக்கு வந்துவிட்டால் இஷாவை முழுமைப்படுத்தித் தொழும் நிய்யத்துடன் ஜமாஅத்துடன் சேர்ந்து கொள்ள வேண்டும். இமாம் ஸலாம் கொடுத்ததும் மீதமுள்ள ரக்அத்தைப் பூர்த்தி செய்து கொள்ள வேண்டும்.

2. அவர்கள் பயணத்திலேயே இருந்தால் இமாமுடன் சேர்ந்து இஷாவை கஸ்ராகத் தொழ வேண்டும். அவர்கள்

தனி ஜமாஅத்தாகத் தொழ வேண்டிய அவசியமில்லை. காரணம் தராவீஹ் தொழுது கொண்டிருப்பவர்களுக்கு அவர்கள் இடையூறு செய்யாமலிருப்பதற்காக.

**குறிப்பு:** ஒரு பள்ளியில் ஒரே நேரத்தில் இரண்டு ஜமா அத் நடத்தப்படுவது கூடாது. ஏனெனில் இது முஸ்லிம் களிடையே பிரிவினையை ஏற்படுத்தி அவர்களின் ஒற்று மையைக் குலைத்துவிடும். ஜமாஅத் தொழுகை கடமை யாக்கப்பட்டிருப்பதன் நோக்கம் முஸ்லிம்களின் ஒற்று மைக்கு அது சான்றாக இருக்க வேண்டும் என்பதற் காகத்தான்.

**சேர்த்து தொழுவதன் சட்டங்கள்**

❖ சேர்த்து தொழுதல் என்பது லுஹரையும் அஸரை யும் சேர்த்து, ம.்.ரிபையும் இஷாவையும் சேர்த்து முற் படுத்தி அல்லது பிற்படுத்தி தொழுவதாகும். அதாவது லுஹரையும் அஸரையும் சேர்த்து லுஹருடைய நேரத் திலோ அல்லது அஸருடைய நேரத்திலோ தொழுது கொள்வது. இவ்வாறு ம.்.ரிபையும் இஷாவையும் சேர்த்து ம.்.ரிபுடைய நேரத்திலோ அல்லது இஷாவுடைய நேரத் திலோ தொழுது கொள்வதாகும். முற்படுத்தி தொழுவது அல்லது பிற்படுத்தி தொழுவது இவ்விரண்டில் எது தோது வானதோ அதைச் செய்து கொள்ளலாம். இவ்விரண்டில் எதைச் செய்தாலும் அது ஆகுமானதே. ்.பஜ்ருடன் வேறு தொழுகையை சேர்த்து தொழக்கூடாது. இவ்வாறே

ஜும்ஆத் தொழுகையுடன் வேறு தொழுகையை சேர்த்து தொழக்கூடாது. பொதுவான அறிஞர்களிடம் இதுவே ஏற்கத்தக்க கூற்றாகும்.

❖ இரண்டு தொழுகைகளைச் சேர்த்து தொழும்போது ஒரேயொரு பாங்கு மட்டும் சொல்லிக் கொள்ள வேண்டும். ஒவ்வொரு தொழுகைக்கும் ஒரு இகாமத் என இரண்டு இகாமத் சொல்ல வேண்டும்.

❖ இரண்டு தொழுகைகளைச் சேர்த்து (ஜம்வு செய்து) தொழுவதற்குரிய நேரம் முதல் தொழுகையின் நேரம் ஆரம்பமானதிலிருந்து இரண்டாவது தொழுகைக் குரிய கடைசி நேரம் வரையாகும். பயணிகள் இந்த நேரத்தின் ஆரம்பத்திலோ நடுவிலோ இறுதியிலோ ஜம்வு செய்து கொள்ளலாம். ஆனால் லுஹறையும் அஸரையும் ம.்.க்ரிபுடைய நேரம் தொடங்கிய பிறகு வரைப் பிற்ப டுத்தக் கூடாது. இவ்வாறே ம.்.க்ரிபையும் இஷாவையும் இரவின் நடுப்பகுதிக்குப் பிறகு வரை பிற்படுத்தக் கூடாது.

❖ ஒரு பயணி இரண்டு தொழுகைகளைச் சேர்த்து பிற்படுத்தித் தொழ வேண்டும் என்ற எண்ணத்தில் தமது பயணத்தைத் தொடர்கிறார். பிறகு தமது சொந்த ஊர் வந்து சேர்ந்து விடுகிறார். மேலும் இரண்டாவது தொழு கையின் நேரமும் ஆரம்பமாகவில்லை எனில் இந்த நிலையில் இரண்டாம் தொழுகையை முதல் தொழு கையுடன் சேர்த்து தொழக்கூடாது. மாறாக ஒவ்வொரு

தொழுகையையும் அதனதனுடைய நேரத்தில் கஸ்ர் செய்யாமல் முழுமைப்படுத்தியே தொழ வேண்டும். இரண்டாம் தொழுகையின் நேரம் தொடங்க சிறிது நேரமே எஞ்சியிருந்தாலும் சரியே. ஏனெனில் கஸ்ராகவும் ஜம்வுவாகவும் தொழுவதற்கான காரணமே பயணம் தான். அந்தப் பயணமே முடிவுற்ற நிலையில் எங்ஙனம் ஜம்வு, கஸ்ர் செய்ய முடியும்?

❖ இவ்வாறே ஒரு பயணி இரண்டு தொழுகைகளைச் சேர்த்து பிற்படுத்தித் தொழ வேண்டும் என்ற எண்ணத் தில் தமது பயணத்தைத் தொடர்கிறார். தொழுவதற்கு முன்பே தமது சொந்த ஊர் வந்து சேர்ந்து விடுகிறார். மேலும் இரண்டாவது தொழுகையின் நேரமும் ஆரம்ப மாகிவிட்டது எனில் இந்த நிலையில் இரண்டு தொழுகை களையும் முழுமைப்படுத்தித்தான் தொழ வேண்டும். காரணம் பயணம் முடிந்து, ஜம்வு- கஸ்ருக்கான காரண மும் நீங்கிவிட்டதனால்.

❖ ஒருவர் இரண்டு தொழுகைகளையும் சேர்த்து பிற்படுத்தித் தொழ வேண்டும் என்ற எண்ணத்தில் புறப் பட்டு தாம் பயணம் மேற்கொண்ட ஊரை வந்தடைந்தார். முதல் தொழுகையின் நேரம் முடிவதற்கு இன்னமும் சிறிது நேரமே எஞ்சியிருக்கிறது. அதன் பிறகு இரண்டாம் தொழுகையின் நேரம் தொடங்கிவிடும். இந்த நிலையில் அவருக்கு பல நிலைகள் உள்ளன.

1. அவர் பள்ளிவாசலை விட்டும் தூரமாக இருந்து பாங்கு சொல்லப்படுவதையும் செவியேற்கா திருந்தால் அவர் இரண்டாம் தொழுகையின் நேரம் வரும் வரை காத்திருந்து பிறகு இரண்டு தொழுகைகளையும் ஜம்வு வாகவும் கஸ்ராகவும் தொழுவதே சிறப்பு. இரண்டாம் தொழுகையின் நேரம் வருவதற்கு முன் அவ்விரண் டையும் தொழுதுவிட்டால் அதுவும் ஆகுமானதே.

2. இரண்டாம் தொழுகைக்குரிய பாங்கு சொன்ன பிறகு-இகாமத் சொல்லப்படுவதற்கு முன் அவர் பள்ளி வாசலுக்குச் சென்று விட்டால் முதல் தொழுகையை கஸ்ராகவும் இரண்டாம் தொழுகையை ஜமாஅத்துடன் சேர்ந்தும் தொழ வேண்டும்.

3. அவர் பள்ளிக்குள் நுழையும்போது மக்கள் இரண் டாம் தொழுகையைத் தொழுது கொண்டிருந்தால் முதல் தொழுகையின் நிய்யத்துடன் அவர் ஜமாஅத்தில் சேர்ந்து கொள்ள வேண்டும். இது பற்றிய விளக்கம் பயணி அல்லாத இமாமைப் பின்பற்றி ஒரு பயணி தொழுவது தொடர்பாக முன்னர் கூறப்பட்டுள்ளது.

❖ இரண்டு தொழுகைளைச் சேர்த்து (ஜம்வு செய்து) தொழுவது பயணிக்கு ஆகுமானதே. இரண்டாம் தொழு கையின் நேரம் வருவதற்கு முன்பாகவே தமது சொந்த ஊரைச் சென்றடைந்து விடலாம் என்று அவருக்கு நன்றாகத் தெரிந்தாலும் சரியே. இவ்வாறு ஒருவர் இரண்டு தொழுகை களைச் சேர்த்துத் தொழுதுவிட்டு இரண்டாம்

தொழுகைக்குரிய பாங்கு சொல்லப்படுவதற்கு முன்னரோ இரண்டாம் தொழுகைக்குரிய நேரத்திலோ தமது சொந்த ஊர் வந்து சேர்ந்துவிட்டால் அவர் இரண்டாம் தொழுகையைத் திருப்பித் தொழ வேண்டியதில்லை.

❖ பயணி தொடர்ந்து பயணம் செய்து கொண்டிருக்கும்போது ஜம்வு செய்து தொழலாம். அவர் ஒரு ஊரில் தங்கிவிட்டால் சிரமம் இல்லாதபோது ஜம்வு செய்யாமல் இருப்பதுதான் பேணுதலான முறை. சிரமமாக இருந்தால் ஜம்வு செய்து கொள்ளலாம்.

❖ விடுபட்ட தொழுகைகளைத் தொழும்போதும் ஜம்வு செய்யும்போதும் வரிசைக்கிரமமாகத் தொழ வேண்டும். ஆனால் மறதியாகவோ சட்டம் தெரியாமலோ வரிசை மாறி தொழுது விட்டால் அது பற்றிக் குற்றமில்லை. அல்லது நடப்புத் தொழுகையின் நேரம் தவறிவிடும் என்று அஞ்சினால், அல்லது நடப்புத் தொழுகையைத் தொழுது கொண்டிருக்கும்போது முதல் தொழுகையோ அல்லது விடுபட்ட (வேறு) தொழுகை நினைவுக்கு வந்தால் அப்போது நடப்புத் தொழுகையை நிறைவு செய்துவிட்டு பிறகு விடுபட்ட தொழுகையை நிறைவேற்ற வேண்டும்.

❖ ஒரு பயணி ம.்.க்ரிப் தொழும்போது இஷாவை முற்படுத்தி ம.்.க்ரிபுடன் சேர்த்துத் தொழுது விட்டால் வித்ருடைய நேரம் அவருக்கு வந்துவிடும். இஷாத்

தொழுகையின் நேரம் வரும் வரை அவர் காத்திருக்க வேண்டியதில்லை.

❖ ஒரு பயணி ம.்.க்ரிபை இஷாவுடன் சேர்த்து தொழுவதற்காகப் பிற்படுத்துகிறார். பிறகு ஒரு ஊரில் மக்கள் இஷா தொழுவதைப் பார்க்கிறார். அப்போது அவர் ம.்.க்ரிபுடைய நிய்யத்தில் அவர்களுடன் சேர்ந்து கொள்ள வேண்டும். அவர் இரண்டாம் ரக்அத்தில் இமாமுடன் சேர்ந்தால் இமாம் ஸலாம் கொடுக்கும்போது அவரும் ஸலாம் கொடுத்து விட வேண்டும். ஏனெனில் அவர் (ம.்.க்ரிபுடைய) மூன்று ரக்அத்தையும் தொழுது விட்டார். அவர் மூன்றாம் ரக்அத்தில் இமாமுடன் சேர்ந்தால் இமாம் ஸலாம் கொடுத்த பிறகு மீதமுள்ள ஒரு ரக்அத்தை தொழுதுவிட வேண்டும். ஆனால் முதல் ரக்அத்திலேயே இமாமுடன் சேர்ந்துவிட்டால் இமாம் நான்காம் ரக்அத்துக்காக எழும்போது இவர் மட்டும் (மூன்றாம் ரக்அத்தில்) அமர்ந்து அத்தஹிய்யாத் ஓதி ஸலாம் கொடுத்துவிட்டு இஷாவுடைய நிய்யத்துடன் மீண்டும் இமாமுடன் சேர்ந்து கொள்ள வேண்டும். அதனால் (ம.்.க்ரிப். இஷா ஆகிய) இரண்டு ஜமாஅத்தும் அவருக்கு கிடைத்துவிடும். இமாம் ஸலாம் கொடுத்த பிறகு தவறிய ரக்அத்தைப் பூர்த்தி செய்து கொள்ள வேண்டும்.

**தொழுகைக்குப் பிறகு ஓத வேண்டிய திக்ருகள்**

ஜம்வு செய்யும்போது இரண்டு தொழுகைகளையும் முடித்த பிறகு முதல் ரக்அத்திற்குரிய திக்ருகளை முதலில் ஓதிவிட்டு பிறகு இரண்டாம் ரக்அத்திற்குரிய திக்ருகளை ஓத வேண்டும். இதுவே சிறந்ததும் பேணு தலான முறையுமாகும். இரண்டாம் ரக்அத்திற்குரிய திக்ருகளை மட்டும் ஓதிக் கொண்டால் அதில் முதல் ரக்அத்திற்குரிய திக்ருகளும் அடங்கிவிடும்.

**விமானத்தில் தொழுதல்**

விமானத்தில் தொழுவது இரு வகைகளாக உள்ளது:

**1. நஃபில்களைத் தொழுதல்:**

பயணி எந்த நிலையிலும் ந.ஃ.பில்களைத் தொழலாம். நின்று கொண்டோ உட்கார்ந்து கொண்டோ தொழலாம். அப்போது ருகூவையும் ஸுஜூதையும் (இருக்கையில் அமர்ந்தவாறு) சைக்கினையின் மூலம் செய்ய வேண்டும். ந.ஃ.பில்களை எத்திசை நோக்கித் தொழுதாலும் சரியே! கிப்லாவை முன்னோக்கித்தான் தொழ வேண்டும் என்ற நிபந்தனை கிடையாது. மற்ற வாகனத்தில் தொழுவதும் இவ்வாறே. தக்பீரதுல் இஹ்ராம் எனும் முதல் தக்பீரின் போது மட்டும் கிப்லாவை முன்னோக்குவது சிறப்பு.

**2. கடமையான தொழுகைகளைத் தொழுதல்:**

ஜம்வு செய்து தொழ வேண்டிய தொழுகைகளாக இருந்தால் (லுஹர், அஸர், ம.ஃ.க்ரிப், இஷா) அதற்கு மூன்று நிலைகள் உள்ளன:

1. அந்தத் தொழுகைகளை விமானத்தில் ஏறுவதற்கு முன்போ விமானத்தை விட்டும் இறங்கிய பின்போ அதற்குரிய நேரத்தில் முற்படுத்தியோ பிற்படுத்தியோ தொழ முடிந்தால் தொழுது கொள்ளலாம்.

2. ஒருவன் தொழுகையின் நேரம் வருவதற்கு முன் விமானத்தில் ஏறினால், மேலும் அவனது எண்ணம் அநேகமாக முதல் தொழுகையின் நேரம் முடிந்த பிறகே விமானம் தரை இறங்கும் என்று இருந்தால் முதல் தொழுகையை இரண்டாவது தொழுகையுடன் சேர்த்து பிற்படுத்தித் தொழ வேண்டும். அந்த இரண்டு தொழுகைகளும் ஜம்வு செய்யத்தக்க தொழுகைகளாக இருந்தால் தான் அவ்வாறு செய்ய வேண்டும். உதாரணமாக லுஹரை அஸருடன் சேர்த்து அஸருடைய நேரத்திலோ அல்லது ம.்.க்ரிபை இஷாவுடன் சேர்த்து இஷாவுடைய நேரத்திலோ தொழுது கொள்வது போல.

3. அவன் தொழுகை நேரம் தொடங்குவதற்கு முன் விமானத்தில் ஏறுகிறான். அவனது எண்ணம் விமானம் தரை இறங்கும் முன் சேர்த்துத் தொழப்படக்கூடிய இரண்டு தொழுகைகளின் நேரம் (லுஹர், அஸர் அல்லது ம.்.க்ரிப், இஷா) அல்லது சேர்த்து தொழ முடியாத தொழுகையின் நேரம் (உதாரணமாக .்.பஜ்ர்) அநேகமாக தவறி விடும் என்று இருந்தால் விமானத்திலேயே அவன் தொழுது கொள்ள வேண்டும். விமானத்தில் தொழுவ

தெற்கென தனி இடம் இருந்தால் அதில்- இயன்றால் கிப்லாவை முன்னோக்கி- தொழுது கொள்ள வேண்டும். தனி இடம் இல்லையெனில் நடைபாதையில் தொழுது கொள்ள வேண்டும். அதற்கும் இயலவில்லை எனில் தாம் இருக்கும் இடத்தில் நின்று கொண்டு தொழ வேண்டும். ருகூவையும் ஸுஜூதையும் தமது இருக்கையில் அமர்ந்த வாறு சைக்கினையின் மூலம் செய்து கொள்ள வேண்டும். நேரம் தவறிவிடும் வரை தொழுகையைப் பிற்படுத்தக் கூடாது.

4. விமானத்தில் தொழுவதற்கென்று தனி இடம் இருந்து அதில் கிப்லாவை முன்னோக்கி நின்று தொழ முடிந்தால் தொழுது கொள்ள வேண்டும். முடிந்தால் ருகூவையும் ஸுஜூதையும் அதனதன் முறைப்படி செய்து கொள்ள வேண்டும். தொழுகை நேரம் முடிவதற்கு அதிக நேரம் இருந்த போதிலும் சரியே.

❖ விமான நிலையம் ஊருக்கு வெளியே இருந்தால் பயணம் புறப்படுபவர் அங்கு கஸ்ர் செய்யலாம். அதுவும் அவரது டிக்கட் முன்பதிவு செய்யப்பட்டு உறுதி செய்யப் பட்டிருந்தால்தான். அவரது முன்பதிவு உறுதி செய்யப் படாமல் காத்திருப்போரின் பட்டியலில் இருந்தால் விமான நிலையத்தில் அவர் கஸர் செய்யக்கூடாது. ஏனெனில் அவரது பயணம் உறுதி செய்யப்படவில்லை என்பதனால்.

❖ விமான நிலையம் ஊருக்குள் இருந்தால் அவர் கஸ்ர் செய்யக்கூடாது. அவரது முன்பதிவு உறுதி செய்யப் பட்டிருந்தாலும் சரி, அல்லது அது காத்திருப் போரின் பட்டியலில் இருந்தாலும் சரி. ஏனெனில் அவர் தமது ஊரை விட்டும் தாண்டவில்லை என்பதனால்.

**ஜும்ஆவின் சட்டங்கள்**

வெள்ளிக் கிழமையன்று இரண்டாம் பாங்கு சொல் லப்படும் முன் பயணம் மேற்கொள்ளலாம். இரண்டாம் பாங்கு சொல்லப்பட்ட பிறகு ஜும்ஆ தொழாமல் பயணம் மேற்கொள்ளக் கூடாது. ஆனால் பின்வரும் நிலை களிலே தவிர.

1. ஜும்ஆ தொழுதால் பயணத் தோழர்கள் கிடைக் காமல் போய்விடும் என்றோ, பஸ் அல்லது விமானம் தவறிவிடும் என்றோ அஞ்சினால் ஜும்ஆ தொழாமல் புறப்படலாம்.

2. வழியில் ஜும்ஆவைத் தொழுது கொள்ள சாத்தியம் இருந்தால் அப்போதும் ஜும்ஆ தொழாமல் புறப்படலாம்.

3. ஜும்ஆ தினம் பெருநாள் தினமாக இருந்தால் பெரு நாள் தொழுகையையும் அவர் நிறைவேற்றி விட்டால் ஜும்ஆவினுடைய இரண்டாம் பாங்கு சொல்லப்பட்ட பிறகு ஜும்ஆ தொழாமல் பயணம் புறப்படலாம். அதன்

பிறகு ஜும்ஆவுக்குப் பகரமாக லுஹர் தொழுகையை கஸ்ராகத் தொழுது கொள்ள வேண்டும்.

❖ பயணம் செய்பவர் வழியில் தொடர்ந்து சென்று கொண்டிருக்கும்போது ஜும்ஆ தொழுவதன் கடமை அவரை விட்டும் நீங்கிவிடும். அல்லது ஜும்ஆ தொழுகை நடத்தப்படாத ஓர் இடத்தில் அவர் இறங்கினால்- ஜும்ஆ வினுடைய பாங்கையும் அவர் செவியேற்காவிட்டால் ஜும்ஆ தொழுவது அவர் மீது கடமையில்லை. மாறாக லுஹர் தொழுகையை அவர் கஸ்ராகத் தொழுது கொள்ள வேண்டும். அல்லது லுஹரை அஸ்ருடன் சேர்த்து ஜம்வுவாகவும் தொழுது கொள்ளலாம்.

❖ ஜும்ஆ தொழுகை நடத்தப்படக்கூடிய ஊரில் அவர் இறங்கினால்- ஜும்ஆவினுடைய பாங்கையும் அவர் செவி யேற்றால் பொதுவான ஆதாரத்தின் அடிப்டையில் ஜும்ஆ தொழுவது அவர் மீது கடமையாகும் என்பதே அறிஞர் களின் ஏற்கத்தக்க கருத்தாக இருக்கிறது. ஆனால் அவர் ஒரு ஊரைக் கடந்து செல்லும்போது- அதே நேரம் பயணத்தைத் தொடர வேண்டிய நிலையில்- ஒரு தேவைக்காக அங்கு நிற்கிறார் ஜும்ஆவினுடைய பாங் கையும் அவர் செவியேற்கிறார் எனில் அவருக்கு ஜும்ஆ கடமையில்லை. ஆனால் ஜும்ஆ தொழுதாலும் அது நிறைவேறிவிடும்.

**சில தவறுகள்**

❖ சில பயணிகள் ஏதேனும் ஓர் இடத்தில் இறங்கி தாங்களாகவே ஜும்ஆ நடத்திக் கொள்கின்றனர். அதுவும் ஜும்ஆ நடத்தப்படாத இடத்தில்! இவர்களது ஜும்ஆ நிறைவேறாது. மாறாக அதனை அவர்கள் லுஹராகத் தான் தொழ வேண்டும். ஏனெனில் அதுதான் அவர்களுடைய கடமையான தொழுகை.

❖ பயணி ஜும்ஆ தொழுதால் அத்துடன் அஸ்ரை ஜம்வு செய்யக்கூடாது. மாறாக அஸ்ரை அதற்குரிய நேரம் வந்த பிறகே தொழ வேண்டும். ஏனெனில் ஜும்ஆ தொழுகை ஜம்வு செய்ய முடியாத தொழுகைகளில் ஒன்றாகும். ஜும்ஆ கடமையில்லாத பயணியாக இருந்தால்- உதாரணமாக அவர் நிற்காமல் தொடர்ந்து பயணம் செய்து கொண்டிருப்பவராக இருந்தால் அல்லது ஜும்ஆ நடத்தப்படாத இடத்தில் இருந்தால் இந்த நேரத்தில் லுஹரையும் அஸ்ரையும் சேர்த்து- சுருக்கி (ஜம்வுவாகவும் கஸ்ராகவும்) தொழ வேண்டும்.

❖ பயணியோ ஊரில் தங்கியிருப்பவரோ ஜும்ஆ தொழுகையில் ஒரு ரக்அத்துக்கும் குறைவானதை அடைந்து கொண்டால் அவர் அதை லுஹராகத்தான் தொழ வேண்டும். பயணியாக இருந்தால் அதை லுஹராகவும் கஸ்ராகவும் தொழுது கொள்ள வேண்டும். சொந்த ஊரில் இருப்பவராக இருந்தால் அதனை நான்கு ரக்அத்தாக முழுமைப்படுத்தித் தொழ வேண்டும். ஆனால் ஜும்ஆ தொழுகையில் ஒரு ரக்அத் கிடைத்து விட்டால்

பயணியும் பயணி அல்லாதவரும் அதை ஜும்ஆவாகவே நிறைவேற்ற வேண்டும்.

عَنْ أَبِي هُرَيْرَةَ أَنَّ رَسُولَ الله ﷺ قَالَ مَنْ أَدْرَكَ رَكْعَةً مِنْ الصَّلَاةِ فَقَدْ أَدْرَكَ الصَّلَاةَ(خ/ ٥٨٠، م/ ٦٠٧)

ஏனெனில் நபி(ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்: “தொழுகையில் ஒரு ரக்அத்தை அடைந்து கொண்டவர் தொழுகையையே அடைந்து கொண்டவராவார்.” (புகாரி 580, முஸ்லிம் 607)

❖ பயணி ஸூரத்துல் கஹ்.ஃப் ஓதுவது விரும்பத்தக் கதாகும். ஏனெனில் இது தொடர்பான ஆதாரம் எல்லோ ருக்கும் பொதுவாகவே வந்துள்ளது. மேலும் ஸூரத்துல் கஹ்.ஃப் ஓதுவது நபிவழி என்பது வெள்ளிக் கிழமையுடன் தொடர்பு கொண்ட விஷயமாகும். ஜும்ஆ தொழுகை யுடன் தொடர்பு கொண்ட விஷயம் அல்ல.

**பயணியின் நோன்பு**

பயணத்தில் சிரமம் இருந்தாலும் சரி சிரமம் இல்லா விட்டாலும் சரி நோன்பு நோற்காமல் இருப்பதே ஏற்ற மானது. ஆயினும் சிரமமாக இருக்கும்போது மட்டும் நோன்பு நோற்காமலிருப்பது மிகச் சிறந்தது. ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்: “பயணத்தில் நோன்பை விட்டுவது அல்லாஹ் வழங்கிய சலுகை யாகும். இந்தச் சலுகையை யார் பயன்படுத்திக் கொள் கிறாரோ அதுவே சிறந்தது. மேலும் பயணத்தில்

யாரேனும் நோன்பு நோற்க விரும்பினால் அவர் மீது எந்தக் குற்றமுமில்லை.” (முஸ்லிம் 1121)

((هِيَ رُخْصَةٌ مِنْ اللهِ فَمَنْ أَخَذَ بِهَا فَحَسَنٌ وَمَنْ أَحَبَّ أَنْ يَصُومَ فَلَا جُنَاحَ عَلَيْهِ))

**பயணத்தில் இருப்பவர் நோன்பை விடுவதற்கு இரண்டு நிலைகள் உள்ளன:**

1. ஒருவர் பயணத்தில் இருந்து கொண்டு நோன்பு நோற்ற பிறகு அதனை முறித்துவிட விரும்பினால் முறித்துக் கொள்ளலாம்.

2. ஒருவர் சொந்த ஊரில் இருக்கும்போது நோன்பு நோற்றுவிட்டு பிறகு பயணம் மேற்கொண்டால் அவர் தமது ஊர் எல்லையைக் கடந்த பிறகே நோன்பை முறிக்க வேண்டும்.

❖ ஒரு பயணி நோன்பு நோற்காத நிலையில் ஊர் திரும்பினால் ஊரில் உண்ணாமல் பருகாமல் நோன்பா ளியாக இருக்க வேண்டிய அவசியமில்லை. ஆனாலும் மக்கள் அவரைத் தவறாக எண்ணாமல் இருப்பதற்காக தாம் நோன்பு நோற்காமலிருப்பதைப் பகிரங்கப்படுத்தக் கூடாது.

❖ ஒருவர் பரிகார நோன்பைத் தொடராக நோற்றுக் கொண்டிருக்கும்போது (உதாரணமாக ஒரு மு.்.மினைத் தவறுதலாகக் கொலை செய்ததற்குப் பரிகாரமாக தொடர்ந்து இரண்டு மாதங்கள் நோன்பு நோற்பது போல) திடீரென பயணம் செய்ய வேண்டிய நிலை ஏற்பட்டு

ஒரு சில நோன்பை அவர் விட்டுவிட்டால் அதனால் அவரது தொடர் அறுந்து போகாது. ஏனெனில் பயணம் என்பது நோன்பை விடுவதற்குரிய தக்க காரணமாகும். (பிறகு பயணத்தில் விடுபட்ட நோன்பைக் கழா செய்யும் போது மீதமுள்ள பரிகார நோன்பையும் சேர்த்து நோற் றால் போதுமானதே. தொடர் ஏற்படுவதற்காக பரிகார நோன்பை திரும்பவும் ஆரம்பத்திலிருந்து நோற்க வேண்டிய அவசிய மில்லை.)

❖ ஒருவர் தமது ஊரிலுள்ள விமான நிலையத்திலோ வேறு விமான நிலையத்திலோ இருக்கும்போது சூரியன் மறைந்து தமது நோன்பைத் துறந்துவிட்டார். அதன் பிறகு அவர் விமானத்தில் பறந்து கொண்டிருக்கும்போது வானில் சூரியனைக் கண்டால் அவர் (உண்ணாமல், பருகாமல்) நோன்பாளியாக இருக்க வேண்டும் என்று அவசியமில்லை.

❖ ஒருவர் சூரியன் மறைவதற்கு சில நிமிடங்களுக்கு முன் விமானத்தில் புறப்படுகிறார். அதன் பிறகு விமானத் தில் அவருக்குப் பகல்தான் வருகிறது எனில் இந்த நிலையில் அவர் நோன்பைத் துறந்துவிடக்கூடாது. மேலும் அவர் இருக்கின்ற வானத்தில் சூரியன் மறையும் வரை ம.்.க்ரிபையும் தொழக்கூடாது. ஆனால் விமானம் அவர் இருக்கின்ற ஊருக்கு மேலேயே பறந்து கொண்டி ருக்கின்றது எனில் சூரியன் மறைந்ததும் அவர் நோன் பைத் துறந்துவிட வேண்டும். ஆனால் அவர் பறந்து

கொண்டிருக்கின்ற வானில் சூரியனைப் பார்த்தால் நோன்பைத் துறந்துவிடக்கூடாது.

❖ முன்பதிவு உறுதிசெய்த ஒருவர் தமது ஊருக்கு வெளியே உள்ள விமான நிலையத்தை நோக்கி வந்து கொண்டிருக்கும்போது தமது ஊரை விட்டும் தாண்டிய பிறகு தொழுகையைக் கஸ்ர் செய்து, நோன்பையும் முறித்து விடுகிறார். அதன் பிறகு விமானம் புறப்படக் காலதாமத மாகிவிட்டது எனில்- அல்லது ஏதோ ஒரு தடங்கல் ஏற்பட்டு அது அவரது பயணத்தைத் தடுத்து விட்டது எனில் அவர் கஸ்ராகத் தொழுததும் நோன்பை முறித்ததும் சரியானதாகிவிடும் ஏனெனில் அவர் ஷரீஅத் திற்கு உட்பட்டதைத் தான் செய்துள்ளார்.

❖ பயணம் அல்லது வேறு காரணங்களால் ரமளா னில் நோன்பை விட்டவர் அதனை வேறொரு நாளில் கழா செய்வது கடமையாகும்.

எல்லாப்புகழும் அல்லாஹ்வுக்கே! அவனது அருளால் தான் நற்செயல்கள் நிறைவடைகின்றன.